# தமிழ்க்கடலில் முத்துக்கள்

# Pearls In Tamil Ocean



திருவாவடுதுறை ஆதீனம்

உ

திருச்சிற்றம்பலம்

# தமிழ்க்கடலில் முத்துக்கள்

திருக்கைலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
குருமகாசந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாணதேசிக சுவாமிகள்**

இந்தியக் குடியரசுத்தலைவர்
**பேரறிஞர், ஜாகிர்ஹுஸேன் அவர்களுக்கும்**

தமிழக முதல் அமைச்சர்
**மாண்புமிகு. C. N. அண்ணாத்துரை M. A., அவர்களுக்கும்**

இரண்டாவது
**உலகத் தமிழ் மாநாட்டின்போது**
வாழ்ந்தியருளியவை.

3—1—1968.



DANCE OF SIVA

உ

THIRUCHITRAMBALAM

# PEARLS IN TAMIL OCEAN

TO

Dr. ZAKIR HUSSAIN
PRESIDENT OF THE INDIAN REPUBLIC

AND

Thiru C. N. ANNADURAI M. A.,
CHIEF MINISTER OF MADRAS

BY

His Holiness
SRI-LA-SRI AMBALAVANA DESIGA SWAMIGAL
MAHASANNIDHANAM
OF THIRUVAVADUTHURAI ADHEENAM OF THIRUKKAILAYAM

Given On

THE 2nd WORLD TAMIL CONFERENCE

on 3rd January 1968.

ஸ்ரீ-ல-ஸ்ரீ
அம்பலவாண பண்டாரச்சன்னதி அவர்கள்
ஆதீனகர்த்தர்
திருவாவடுதுறை ஆதீனம்.

திருவாவடுதுறை
( தஞ்சை மாவட்டம். )

# ஆசியுரை

நாம் ஆட்சிக்குவந்த சில நாட்களுக்கு உள்ளேயே இந்தியப்பேரரசின் குடியரசுத்தலைவர் பேரறிஞர் மாண்புமிகு ஜாகிர்ஹுஸேன் அவர்களுக்கும், மக்கள் நன்மதிப்பையும் ஒத்துழைப்பையும்பெற்ற நமது தமிழக முதல் அமைச்சர் மாண்புமிகு C. N. அண்ணாத்துரை அவர்களுக்கும், உலகத் தமிழ்அறிஞர் மாநாட்டின்போது நம் ஆசியைத் தெரிவிப்ப தற்கு மகிழ்ச்சி கொள்கிறோம். மாநாட்டுப் பிரதிநிதிகளையும் அவ்வாறே வரவேற்று அவரவர்களுடைய ஆய்வுரைகள் வெற்றிகரமாக முடிவுறுதற்கும் எங்களது நல்லாசிகளைக் கூறுகிறோம்.

நமது ஆதீனமானது புகழ்பெற்ற நல்லருளாளரால் நிறுவப்பெற்றது. ஞானச்செல்வர்கள் பலர் பட்டம்தாங்கிச் சமயத் தொண்டுமட்டும் அன்றித் தமிழுக்கும் தமிழ்ப் பண் பாட்டிற்கும் உறைவிடமாக்கி வந்திருக்கிறார்கள். இன்றும் செந்தமிழ்த் தொண்டைப் பலவகைகளிலும் நமது ஆதீனம் செய்து வருவதை உலகம் அறியும்.

உலகத்தமிழறிஞர் மாநாடுகூடும் இந்த அரிய சந்தர்ப் பத்திலே தமிழ் நூல்களிலுள்ள சிறந்த கருத்தோவியங்களைத் தொகுக்கச்செய்தும், அனைவரும் உணர ஆங்கிலத்திலே மொழிபெயர்த்தும் மாண்புமிகு குடியரசுத் தலைவர் அவர் கட்கும், மாண்புமிகு தமிழக முதல் அமைச்சர் அவர்கட்கும் வழங்கும்வண்ணம் திருவுளம் பற்றினோம்.



திருக்கயி[illegible]ரைத் திருவாவடுதுறை ஆதீனம்

[illegible] குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ [illegible]தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

SRI-LA-SRI
AMBALAVANA PANDARASANNADHI AVL.,
ADHINAKARTHAR
TIRUVAVADUTHURAI MUTT.

TIRUVAVADUTHURAI
(THANJAVUR DT.)

# BENEDICTION

Within a few days of our ascendency to this Adheenam it is our pleasure and joy to greet and give our benediction to the illustrious President of India, Dr. Zakir Hussain and the popular Chief Minister of Madras, Thiru C. N. Annadurai in connection with the unique occasion of the World Tamil Conference. We extend our greetings also to the Conference delegates and wish their deliberations success. This Adheenam presided over by eminent men in the past has been a seat of Tamil learning and culture besides its religious ministry. As a mements of this great occasion, we have had this brochure containing the wisdom of the Tamils to be presented to our beloved President and our visitors as a token of our esteem.

# அணிந்துரை

தமிழகத்தின் நெற்களஞ்சியமாகத் திகழும் தஞ்சை மாவட்டத்தில், தமிழ் வளரும் திரு இடமாக விளங்கும் திருவாவடுதுறையில், அறம்வளர்க்கும் சாலையாக முந்தைய-ரால் அமைக்கப்பட்டுள்ள பெருமடத்திலிருந்து வெளிவந்துள்ள இந்நூலைப் போற்றிப்பாராட்டி வரவேற்கிறேன்.

அதுவும், இரண்டாவது உலகத் தமிழாராய்ச்சிக் கருத்-தரங்கு மாநாட்டின்போது இந்நூல் வெளிவருவது மட்டிலா மகிழ்ச்சியை அளிக்கிறது.

சங்க காலத்திலிருந்து இற்றைக்காலம் வரையில் ஆழ்ந்து அகன்று, பரந்துகிடக்கும் தமிழ்க்கடலில்மூழ்கிச் சொல்நயமும், பொருள்நயமும் மிக்க ஒளியுமிழும் இயற்கை முத்துக்களைப் பொறுக்கி எடுத்து, அவையொத்த ஆங்கிலச் செயற்கை முத்துக்களை உருவாக்கி எல்லாவற்றையும் இந்நூலில் ஒன்றாகக் கோர்த்து மாநாட்டினர்க்கு மாலையாகச் சூட்டும் திருவாவடு துறை அறப்பெருமடத்தினரின் அரும்பணியைப் பெரிதும் பாராட்டுகிறேன்.

தமிழரின் தொன்மையும், தனித்தன்மையும் வாய்ந்த நாகரிகச்சிறப்பையும் பண்பாட்டு மேம்பாட்டையும் சிறிதளவு உலகோர்க்கு உணர்த்திட இந்நூல் உதவியாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

திருவாவடுதுறை அறப்பெருமடத்தின் தமிழ் வளர்க்கும் தொண்டுள்ளம் வாழ்க! வளர்க!

அன்புள்ள,

சென்னை,
23—12—67.

(ஒ-ம்) இரா. நெடுஞ்செழியன்,
கல்வி - அறநிலைய அமைச்சர்.

# FORWORD

This "PEARLS IN TAMIL OCEAN" Presented on the occasion of the Second International conference-Seminar of Tamil Studies is to be greatly welcomed. Pearls of beauty have been taken out of the sea of Tamil Literature, deep and vast. The fine and shine of the pearls are reflected in the chisteled phrases and the noble thoughts of the poems. The cultured pearls of the English renderings have also been added. Truly, this is a garland of pearls.

I am certain that this collection will serve the useful purpose of indicating, though in a small degree, the ancient and the unique nature of the Tamil civilisation and culture.

The district of Thanjavur is not only the granary of the South, but also the store-house of knowledge and culture, and Thiruvavaduthurai Adheenam is an ancient institution of fame and name contributing to the development of Tamil and culture. I greatly appreciate the institution for having brought out this valuable publication.

May the services of Thiruvavadhuthurai Adheenam in the cause of Tamil be ever growing and ever lasting.

Madras,
23-12-1967 } (Sd.) V. R. Nedunchezhiyan.
Minister of Education & Endowments.

திருவாசகம்

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே ?

— மாணிக்கவாசகர்.

## THIRUVACHAGAM

THOU art the Heaven; Thou art the Earth;
Thou art the Wind; Thou art the Light;
The Body Thou; the Soul art Thou;
Existence, Non-existence Thou;
Thou art the King; these puppets all
Thou dost make move, dwelling within,
That each one says: 'Myself and mine'.
What shall I Say? How render Praise?

— *St. Manickavachagar.*

## கடவுள் வாழ்த்து

யாம் இரப்பவை,
பொருளும் பொன்னும் போகமு மல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருள்இணர்க் கடம்பின் ஒலிதா ரோயே!

— பரிபாடல்.

### குறிப்பு

மேலே குறிப்பிட்டுள்ள செய்யுள் பரிபாடலில் உள்ளது. பரிபாடல் சங்க காலத்திய தொகை நூல்களுள் ஒன்ருகும். கிறித்து பிறப்பதற்கு முன்புள்ள நானூறு ஆண்டுகளும், கிறித்துவுக்குப் பின்புள்ள ஒரு நூருண்டும் சேர்ந்த ஐந்நூறு ஆண்டுகளே சங்க காலம் எனப் பெயர் பெறும். மேலே குறிப்பிட்டுள்ள செய்யுள், பலர் கூடிச் செய்யும் வழிபாடுகளிலும், தனித்துச் செய்யும் வழிபாடுகளிலும் இசையோடு பாடப்பெற்ற தாகும். இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே இவ்வழிபாட்டின் பொருள் பொன்னேயே பொருள் என மதிக்கும் இன்றைய உலகத்துக்கு இடித்துக்கூறும் வகையில் அமைந்து உள்ளது. நிலையில்லாதவற்றிலும் நிலையுள்ளவை சிறந்தன என்பதைக் காட்டுகின்றது. அளவைநூல் (தர்க்க) முறைப்படி இந்தச் செய்யுள் அமைந்துள்ளமை, அக்காலத்து மிக உயர்ந்த அறிவியல் பண்பைக் காட்டுகின்றது.

## PRAYER

WE pray Thee not for gold
The gold that gives us wealth;
We pray Thee not for wealth
The wealth that gives us pleasure;
We pray Thee not for pleasure
The pleasures we enjoy;
We pray and pray Thy Grace
The Grace that comes of love;
We pray Thee for the love
The all embracing love;
The love that comes of Righteousness;
We pray Thy Grace to lead us all
In the path of Righteousness.
Oh! God of Kadamba wreath!

— *Paripadal.*

### Note

This Prayer is taken from Paripadal one of the Sangam anthologies. The Sangam age in Tamil literature spreads over a period of five hundred years ranging from the fourth century before Christ to the first century after Christ. These poems were set to music and sung in public gatherings and private worshipping places even two thousand five hundred years ago. The contents of the prayer may sound a note of caution to the materialistic attitude of the modern world. The superiority of the eternal to the evanescent is well impressed. Logical arrangement indicates the noble culture.

அறந் தெரி திகிரி

சினனே காமங் கழிகண் ணோட்டம்
அச்சம் பொய்ச்சொல் அன்புமிக வுடைமை
தெறல்கடு மையொடு பிறவும்இவ் வுலகத்து
அறந்தெரி திகிரிக்கு வழியடை யாகும்.

— பதிற்றுப்பத்து.

## குறிப்பு

மேலே குறிப்பிட்டுள்ள பதிற்றுப்பத்துச் செய்யுள், பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்னும் சேர மன்னனைப் பாலைக் கௌதமனர் என்னும் புலவர் பாடியதாகும்.

தீய எண்ணங்கள் இன்மை, சமன் நோக்கு, பல்வகை அச்சம் இன்மை ஆகிய இவைகள் நீதி வழங்குவோர்க்கு இன்றியமையாத பண்புகளாக வேண்டப்படுபவை; இவை இன்மையும், பழிக்குப்பழி வாங்கும் பான்மையும் நல்லறம் நாடெங்கும் வழங்கத் தடையாகும் என்பது குறிக்கப்பெற்றுள்ளது. இச்செய்யுள் இரண்டாயிரத்து இரு நூற்றுண்டுகளுக்கு முற்பட்டதாகும்.

## THE WHEEL OF LAW

THE wheel of Law doth stop its Motion
When anger, lust, undue favour,
Falsehood, cowardice and excess love
For wealth and cruel punishments appear.
Know this, my Lord of mighty lineage.

— *Pathirruppathu.*

### Note

The control of passions, the impartial outlook, contempt for avarice and freedom from different kinds of fears are the main personal qualities required for those who are destined to administer justice. The negation of these qualities and Draconic laws impede the proper administration of justice. This passage is from *Pathirrup-pathu,* one of the Sangam anthologies, and is addressed to a *Chera* king known as *Kuttuvan of Many Elephants.*

## தன்னல மின்மை

இனியவை பெறினே தனித்தனி நுகர்கேம்
தருகென விழையாத் தாவில் நெஞ்சத்துப்
பகுத்தூண் தொகுத்த ஆண்மைப்
பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே.

— பதிற்றுப்பத்து.

### குறிப்பு

தமக்கென வாழாத பெரியோர்கள் உலகில் வாழ்கின்ற படியால்தான் உலகம் நிலைபெற்றுள்ளது. அத்தகையாரது எண்ணிக்கை ஒருநாட்டில் எவ்வளவுக்கெவ்வளவு உயர்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு நாடும் நன்மை அடைகின்றது. மேற் செய்யுளில் அரசன் தனக்கென ஒன்றைத் தனித்துண்ணாது சூழ்ந்துள்ளவர்களோடு பகுத்து உண்ணும் பெருமையை விளக்கி இருப்பதோடு அத்தகைய தலைவன்கீழுள்ள மக்களும் தமக்கென வாழாத் தன்மையைப் பெறுகின்றார்கள் என்பதும் குறிக்கப் பெற்றுள்ளது.

இப்பாடல் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலைக் காப்பி யாற்றுக் காப்பியனார் பாடியது. இரண்டாயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முற்பட்டது.

## HE SHARES

FAR and wide thy fame prevails;
As man you gather to share with men
All that sustains and gives us pleasure;
In short, you live for all the world.
We, who get our humble doles,
Hoarding not, do share with all.
'As the ruler, so the subjects'.

— *Pathirruppathu.*

### Note

A country becomes happy in proportion to the number of noblemen who lead selfless life. Here, the poet praises the king for his selfless quality which, by ethical force, reflects even on those who are prone to be selfish. The king, as an embodiment of manly qualities, shares his delicious food without making anyone feel that he gives. The world praises him because he shares. This passage is also from *Pathirruppathu* — Two thousand two hundred years ago.

உலகின் உயிர்

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால், யான்உயிர் என்பது அறிகை
வேல்மிகு தானை வேந்தர்க்குக் கடனே.

—புறநானூறு.

## குறிப்பு

உலகிலுள்ள பலவகையான தொடர்புகளுள் உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பைவிட நெருக்கமும், தூய்மையும் உடையது வேறொன்றில்லை. இத்தொடர்பையே தொடர்பாக எண்ணாது ஒன்று என்ற நினைவிலேயே ஆழ்ந்த சிந்தனையுடையோரும் இருப்பார்கள். மேற்செய்யுளில் அரசனுக்கும் மக்களுக்கும் உள்ள தொடர்பு உயிர்க்கும் உடலுக்கும் உள்ள தொடர்போடு ஒப்பிடப்பட்டிருக்கின்றது. உயிர் இயக்க உடல் இயங்குகின்றது. இச்செய்யுள் சங்க காலத்தைச்சேர்ந்த புறநானூறு என்னும் தொகை நூலில் இருந்து எடுக்கப்பெற்றது. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டது. பாடியவர் மோசி கீரனார்.

## BODY AND SOUL

NOT by food the world exists;
Nor the water gives the life.
The wide expanse of earth doth live,
Because the ruler is its life;
To know this truth is duty first
Of those that stand to rule the land.

—*Purananuru.*

### Note

Of all the relationships known to human mind, the relationship between the body and soul is considered to be the most intimate and sacred. This intimacy is so intense, no one-not even the greatest of thinkers used to think that these two are separate entities. Our poet compares the relationship between the rulers and the ruled to that of the body and the soul. The body moves as the soul directs. This passage is also from *Purananuru*, a Sangam anthology — 2000 years ago.

## உண்மை மாண்பு

கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரு நெஞ்சுடைய புகன்மறவருமென
நான்குடன் மாண்ட தாயினு மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்
அதனால், நமரெனக் கோல் கோடாது
பிறரெனக் குணங்கொல் லாது
ஞாயிற் றன்ன வெந்திற லாண்மையும்
திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்
வானத் தன்ன வண்மையு மூன்றும்
உடைமை யாகி யில்லோர் கையற
நீநீடு வாழிய !

—புறநானூறு.

### குறிப்பு

உலகம், தோன்றிய அக்காலந்தொட்டே போர்க்களமாகவே இருந்து வந்திருக்கிறது. விலங்குத் தன்மையான வன்மையாலேயே ஒருவரை யொருவர் அடக்கி யாண்டு வந்திருக்கின்றனர்கள். இவ்விலங்கியல் வலுவிற்கு மாண்பு என்னும் மறுபெயரும் சிற்சில சமயங்களில் வழங்குவதுண்டு. பல்லாலும் நகத்தாலும் வெற்றிபெற்றது ஒருகாலம்; பலவகைப் படையால் வெற்றி தேடியது மற்றொரு காலம். இத்தகைய காலமெல்லாம் அதன் பின்வருங் காலங்களால் நன்கு மதிக்கப் பெற்றன அல்ல. இச்செய்யுளில் புலவர், உண்மை மாண்புக்கு அறப்பண்புகளே இன்றியமையாதன என்பதை விளக்கிக் காட்டுகின்றனர். இது புறநானூற்றிலுள்ள செய்யுள். பாண்டியன் நன்மாறனை மதுரை மருதன் இளநாகனார் பாடியது.

## REAL GREATNESS

THOUGH the rulers win their fame
By arms fourfold of steeds and cars,
Warriors brave and elephants fierce,
Does greatness lie on these alone?
Victory true comes from flawless laws;
So swerve not the sceptre to favour thine,
Snip not the virtue found alien;
Combine the splendour of the mighty Sun
To the cooling lustre of the pleasing Moon.
And bestow your gifts like the showering rain.

—*Purananuru.*

### Note

Ever since the creation of the animate world, it has been a battle ground, where beastly strength in the honoured name of Might has won the admiration of the world. Once it was the strength of the teeth and claws; then the strength of the mighty arms. Each age has in turn been considered savage by the succeeding ages. Our poet advises the ruler as to the noble way by which perpetual greatness may be attained. Where the men in power are apt to mislead themselves, is hinted. The simile, combining the elements given in comparison with the noble qualities to be formed, is capable of giving greater truths for any thinking mind.

அருளும் அன்பும்

அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரொ டொன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி
அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே.

—புறநானூறு.

## குறிப்பு

இப் புறநானூற்றுச் செய்யுள், கடுஞ் சினமுடைய காவலாளர்களின் கூட்டுறவுதான் வெற்றிக்கும் ஆட்சிக்கும் வேண்டப்படுவதென எண்ணிவந்த காலத்தை நினைவுபடுத்திக் கொண்டு, அத்தகைய முறையெல்லாம் தீமை பயப்பனவே என்பதைத் தெரிவிப்பதோடு, குழந்தைக்குப் பாலூட்டும் தாயின் அன்போடு உலகாள்பவர் மக்களைப் போற்றவேண்டும் என்பதை வற்புறுத்துகின்றது.

இதனைப் பாடியவர் நரிவெரூஉத்தலையார். இப்பாட்டு 2000 ஆண்டுகட்கு முற்பட்டது.

## LOVE AND GRACE

BEFRIEND thou not with worthless men
Who sink themselves in burning hell
Devoid of love and grace;
Thy rule should take the form of tender care
With which the mother nurses suckling;
Though hard for mortals all,
Strive to get and rule the world.

— *Purananuru.*

### Note

The poet, remembering the age of rulers who associated themselves with ruthless men in the belief that such qualities are necessary for maintaining their rule, advises the king to dissociate himself from them and base his administration on love and grace

This passage is also from *Purananuru*, a Sangam anthology, 2000 years ago.

## நீர்நிலை பெருக்குக

தகுதி கேள்இனி மிகுதி யாள
நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே
உண்டி முதற்றே உணவின் பிண்டம்
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசி னோரே
வித்திவான் நோக்கும் புன்புலங் கண்ணகன்
வைப்பிற் றாயினும் நண்ணி யாளும்
இறைவன் தாட்குத வாதே அதனால்
அடுபோர்ச் செழிய இகழாது வல்லே
நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோர் அம்ம இவண்தட் டோரே
தள்ளா தோரிவண் தள்ளா தோரே.

—புறநானூறு.

### குறிப்பு

மேலே குறித்த செய்யுள் புறநானூறு என்னும் சங்க காலத் தொகை நூலில் உள்ளதாகும். உணவுப் பெருக்கத்தின் இன்றியமையாமையையும், அப்பெருக்கத்துக்கு நீரின் இன்றியமையாமையையும், அந்நீரை நிலத்தில் சேர்ப்பதற்கு இயற்கை மழை ஒன்றையே துணையெனக் கருதி நின்றுவிடுவது நாடாள்பவர்க்குச் சிறுமையை விளைவிக்கும் என்பதையும், அணை, குளம் முதலிய பல வழிகளிலும் நீர்நிலையைப் பெருக்கவேண்டும் என்பதையும் இச்செய்யுள் வழியாகப் பாண்டியன் நெடுஞ்செழியன் என்னும் அரசனுக்குக் குடபுலவியனர் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே தெரிவித்திருக்கிறார். இது இன்றும் தேவைதானே !

## INCREASE THE RESERVOIRS

THOU Mighty Ruler, listen to my song,
Who gives to frames of men the food
They need, these give them life;
For food sustains the mortal frame,
But food is earth with water blent:
So those who join the water to the earth
Build up the body, and supply its life,
Men in less happy lands sow seed, and watch to skies for rain,
But this can ne'er supply the wants of kingdom and of king.
Therefore, O! Cezhiyan, great in war, despise this not;
Increase the reservoirs for water made
Who bind the water, and supply to fields
Their measured flow, these bind
The earth to them. The fame of others passes swift away.

— *Purananuru* - Trans. G. U. Pope.

### Note

This passage from *Purananuru*, an anthology compiled two thousand years ago, advises the king Pandiya to increase the water supply for food production. The poet remarks with derision the unenterprising attitude of taking things as they come and emphasises the adoption of the noble spirit of getting things as we want.

What was said of irrigation two thousand years ago is true even to day.

உழவன் சிறப்பு

பொருபடை தரூஉங் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே!
மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை யல்லன செயற்கையிற் றோன்றினும்
காவலர்ப் பழிக்கும்இக் கண்ணகன் ஞாலம்
அதுநன்கு அறிந்தனை யாயின் நீயும்
பகடுபுறந் தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறந் தருகுவை யாயின் நின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே.

—புறநானூறு.

## குறிப்பு

இப் புறநானூற்றுச் செய்யுள், உழவின் சிறப்பை வற்புறுத்துவதோடு உழவரை உலகாள்வார் தாங்க வேண்டிய கடமையையும் எடுத்துக் காட்டுகிறது. இதனோடு அமையாது, அவரவர்கள் நாட்டு இயற்கைக்கு மாறாக மக்கள் உள்ளமும், செயலும் திரும்புவதற்கு ஏதுவாகஉள்ள பொறுப்பில்லாத மக்களின் சொற்களை நாட்டில் பரவவிடுவது நாடாள்வார்க்குப் பழியை விளைக்கும் என்பதையும் குறிப்பிடுகிறது. இச் செய்யுளை வெள்ளைக்குடி நாகனார் பாட, சோழன் கிள்ளிவளவன் நிலவரியைத் தள்ளிக் கொடுத்தான். இப்பாட்டு 2000 ஆண்டுகட்கு முற்பட்டது.

## THE PLOUGH

The victory of your forces in battle
Is born of the share that tills the soil;
If rain doth fail and yield diminish,
And people turn against their nature
And imbibe cults made by some,
The wider world will blame the king;
You know this well; so refuse the words
Of those with views of foreign shade
Untested in the land you rule.
Bear the people who bear the plough
Even thy foes will bear thy feet.

—*Purananuru.*

### Note

This poem from *Purananuru*, besides emphasising the necessity of state protection for agriculturists, goes further with a political insight to suggest avoidance of views not tested by indigenous experiences. Foreign cults, however formidable and fascinating, may prove disastrous if heeded to without proper appraisal.

The poet got remission of arrears of land tax from the Chola King.—2000 years ago.

## திருக்குறள்

திருவள்ளுவர் திருவாய் மலர்ந்தருளிய திருக்குறள் என்னும் அரிய நூல் ஆயிரத்து முந்நூற்று முப்பது பொன்மொழிகளைக் கொண்ட விலை மதிக்க ஒண்ணாத அறிவு நிதியாகும். மக்களின் உயர்ந்த தூய இலக்கணம் அது எனக் கூறலாம். வள்ளுவனார், கணபூசியார் சாக்கரதிசு எபிரேய முனிவர்கள் முதலிய உலகப் பேரறிஞரோடு வைத்து எண்ணத்தகும் பெரியார் ஆவர். தமிழ் மக்களுடைய உள்ளத்தில் நன்கு வேரூன்றி நிற்கும் சில நூல்களுள் இது முதன்மை பெற்றதாகும்.

இங்கிலாந்து, பிரான்சு, சருமனி, இத்தாலி முதலிய மேல்நாடுகளில், இந்நூல் தக்க இடம் பெற்றுள்ளது. இந்தியாவில், பரவியுள்ள எல்லாச் சமயத்தினரும் வள்ளுவனுரைத் தங்கள் தங்கள் சமயத்தவர் என்று சொல்லிக்கொள்ளப் பெருமை அடைகின்றுர்கள். கிறித்தவப் பாதிரிமார்கள், இந்நூலை ஆண்டவன் மலைமேல் அருளிய திருமொழிகளின் எதிரொலி எனச் சொல்லிக் கொள்ளும் அளவு முன்வந்துள்ளார்கள். ஒரு நூற்றுண்டுக்கு முன், அஃதாவது ஆயிரத்து எண்ணூற்று நாற்பதில், **திரையோ** என்னும் பாதிரியார் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்.

"குறள் இந்நாட்டின் சிறந்த இலக்கியப் பகுதிகளுள் ஒன்றுகவும், உண்மையான உயர்வுடைய நூலாகவும், நம்முடைய கருத்தை இழுப்பதற்கு வலிய உரிமை உடையதாகவும் இருக்கின்றது. இதன் ஆசிரியர் ஒவ்வொரு மரபுக்கும் தனியாக உள்ள நீதிகளைத் தள்ளிவிட்டு, எல்லார்க்கும் பொதுவான நீதிகளைக் கூறுமிடத்து மனுநூல் முதலிய சாத்திரங்களில் கூறும் சுவையற்ற சடங்கு விபரங்களை எல்லாம் ஒதுக்கிவிட்டார். இவ்வாறு பொதுவாக ஒரு பெருமித நடையை நிலைத்து வைத்துள்ளார்".

வள்ளுவனார், பழைய நாட்களில் வாணிபம் சிறந்த பட்டினமும், தமிழ்நாட்டுத் துறைமுகமுமான - இப்பொழுது சென்னைமாநகரின் ஒரு பகுதியாக உள்ள மயிலாப்பூரிலே இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் தோன்றியவர்.

## SAYINGS OF ST. VALLUVAR

These sayings, given in the following pages, are taken from the One thousand three hundred and thirty sayings from Thirukkural, a masterpiece of Tamil Literature, and one of the highest and purest expressions of human thought. The author of this work is one of the geniuses of the world and he is to be ranked with the ancient Hebrew prophets, Confucius, Socrates and other early leaders of human thought and morals. This work is one of the select number of great works which have entered into the very soul of a whole people and which can never die.

It has found a home in England, France, Germany and Italy. Every sectarian in India claims kindred with the author. The Christian missionary has gone so far as to call this grand system of morals, an Echo of the Sermon on the Mount. The Rev. Drew wrote in 1840 thus :- "The Kural has a strong claim upon our attention as a part of the literature of the Country, and as a work of intrinsic excellence. The author, passing over what is peculiar to particular classes of society, and introducing such ideas only as are common to all, has avoided the uninteresting details of observances found in Manu and the other Shastras; and thus in general maintains a dignified style".

The author was born some 2000 years ago at Mylapore, a suburb of Madras, then a leading emporium of Tamil land and one of the centres of Tamil learning.

வள்ளுவர் வாய்மொழி

தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.

## குறிப்பு

நாடு என்பதை நிலப்பரப்பின் அளவால் பகுத்துக் கூறுது, அங்கு வாழும் மக்களின் பண்பால் கூறி இருப்பது, மக்களின் உயர்வே நாட்டின் உயர்வு என்பதை வலியுறுத்தும்; அறிவாலும், உழைப்பாலும், நாட்டின் விளைவளனையும் பொருள் வளனையும் உயர்த்துவாரும், மாசறு காட்சியும் தூய நெறியும் உடைய பெரியோரும், எவ்வளவுக்கெவ்வளவு உயர்ந்துள்ளார்களோ, அவ்வளவுக்கவ்வளவு நாடு உயரும்.

## ST. VALLUVAR'S SAYINGS

WHERE spreads fertility unfailing, where resides
a band
Of virtuous men and those of ample wealth, call
that a 'Land'

### Note

Any geographical area becomes entitled to be called a country only when it is populated by human beings. The honour of a country depends upon the mental and moral qualities of the population. The above couplet epigrammatically expresses the three main qualities, namely, labour, virtue and enterprise, to be the ingredi - ents of any land that can be called a country with appro - priateness.

## வள்ளுவர் வாய்மொழி

உறுபசியும் ஓவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேராது இயல்வது நாடு.

### குறிப்பு

நாட்டின் இலக்கணம் கூறும் வகையால் நாட்டை ஆள்வாரது கடமைகளைக் கூறுகின்றார். , விளைவைப் பெருக்கிப் பசிப்பிணி தலைகாட்டவொட்டாமல் தடுப்பதும் தக்க முறைகளால் நாட்டில் நோய் பரவாது தடுத்தலும், வேற்று நாடுகளோடு வைத்துக்கொள்ளும் உறவினால் பகைவர் படையெடுக்கவொட்டாது தடுத்தலும் முதற் கடமைகளாகும்.

## ST. VALLUVAR'S SAYINGS

THAT is a 'Land' whose peaceful annals know,
Nor famine fierce, nor wasting plague nor ravage of the foe.

### Note

By way of defining the ideal country, the above couplet stresses on the prime duty of the rulers to keep the country free from famine and pestilence by increased production and preventive measures. The foreign policy should be such as not to make any one attack the country.

வள்ளுவர் வாய்மொழி

காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்.

குறிப்பு

அரசியல் அலுவல்களை, தம் கடமையைச் செய்யும் அறிவும் ஆற்றலும் உள்ளவர்களுக்கே கொடுத்தல் வேண்டும். அவ்வாறன்றி வேறு அன்பு காரணமாகப் பிறர்க்குக்கொடுப்பின் அறியாமை காரணமாகப் பெருங்கேடு விளையும்.

## ST. VALLUVAR'S SAYINGS

BY fond affection led, who trusts in men of unwise soul,
Yields all his being up to folly's blind control.

### Note

Services of the state should go only to men who have got the knowledge and capacity to discharge their duties. If preference goes by love and affection, the result will be disaster born of ignorance.

வள்ளுவர் வாய்மொழி

இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

குறிப்பு

ஒருவன், தான் உயர்ந்த நிலையில் இருந்து தன் பெருமையைப் பாராட்டிக்கொள்ளும்பொழுது, முன்னுளில் அவ்வாறு பெருமை பாராட்டியதால் சோர்வடைந்தவர்களின் கேட்டை நினைந்து அத்தகைய சோர்வுக்காளாகாமல் இருத்தல்வேண்டும்.

## ST. VALLUVAR'S SAYINGS

THINK of the men whom scornful mind hath
brought to nought,
When exultation overwhelms thy wildered thought.

### Note

When people in position get elated on account of some success in some fields of their activities, they are apt to become lethargic. The only antidote is to recollect the lives of those that fell from their exalted position.

சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்.

## குறிப்பு

ஆட்சி முறையில் நாட்டின் நலங்கருதி எண்ணவேண்டிய பல பொருள்களிலும் அவ்வாறு எண்ணி முடிக்கும் பொறுப்புடையார் காய்தல்உவத்தலில்லாது உண்மையான நன்மையைக் காணவேண்டும் என்னும் கருத்துடையராதல்வேண்டும். இத் தகைய மனநிலையே அரசியல் துறையில் செவ்வியநிலை எனப் பெயர் பெறும். ஒருவர் செவ்வியநிலை யுடையரா அல்லரா என்பது, தம்மின் மெலிந்தாரிடத்து வரும் உண்மை நன்மையை மேற்கொண்டு தம் கொள்கையைத் தோல்வியுற்றதாக மன முவந்து கொள்ளும் செயலாலேயேதான் காணப்பெறும். வெறும் வாய்ச்சொல் பயன் இலவாம்.

## ST. VALLUVAR'S SAYINGS

WHAT is perfection's test? The equal mind,
To bear repulse from even meaner men resigned.

### Note

Keeping an open mind, in searching solutions for several problems of the state, is the chief mental quality of the men in responsible positions. This is what is called perfection in a politician. The real test will be found only when they accept their defeat even in the hands of men of lesser position.

## வள்ளுவர் வாய்மொழி

ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்(கு)
ஆழி எனப்படு வார்.

### குறிப்பு

வானமும், நிலனும் தம் நிலையிலிருந்து மாறுபட்டாலும், ஆய்ந்து கடைப்பிடித்து உயர்ந்த கொள்கையுடையார் தம் நிலையிலிருந்து ஓரணுவளவும் சாயார்.

## ST. VALLUVAR'S SAYINGS

CALL them of perfect virtue's sea the shore,
Who, though the fates should fail, fail not for
ever more.

### Note

The sky may fall, the earth may break, but the men of perfect virtue will not swerve an inch from the stand they took on mature considerations of fundamental moral principles.

வள்ளுவர் வாய்மொழி

பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்.

குறிப்பு

நிலத்தை உழுது பெரும்பயன் கொள்வாரது துணை கொண்டு நாட்டை ஆளின், பல நாடுகளுக்கும் உதவும் முகத் தானே தங்கள் ஆட்சியின் பயனைக்கொடுப்பர்.

## ST. VALLUVAR'S SAYINGS

O'ER many a land they 'll see their monarch reign,
Whose fields are shaded by the waving grain.

### Note

The nation that shelters the men working on the fields producing bumper crops will give shelter to many nations. The importance of agriculture is stressed.



e

வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு.

## குறிப்பு

ஆளுவோரின் ஆணைகொண்டு மக்களிடத்துப் பொருள் வேண்டுமென்று, எவ்வளவு நயந்து கேட்பினும், கொடுத்தே தீரவேண்டும். இல்லையேல், துன்பத்துக்கு ஆளாவார்கள். கூரிய வேல்கொண்டு ஒரு கள்வன் வழிச்செல்வோனைப் பார்த்துக் 'கைப்பொருளை வைத்துப்போ' என்று கூறும்பொழுது மறுத்தால் என்ன ஆகும் என்பதை உணர்தல் வேண்டும்.

## ST. VALLUVAR'S SAYINGS

US 'Give' the robber cries with lance uplift,
So kings with sceptred hand implore a gift.

### Note

When men in power approach the public for any kind of donation in whatever humble form, they resemble the men with spear who go on begging gifts. Needless to say it is the fear of the spear that makes people to part with their money and not any willingness on the part of those who give.

வள்ளுவர் வாய்மொழி

இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்(து)
அதனை அவன்கண் விடல்.

## குறிப்பு

ஒருவனுக்கு ஓர் அலுவல் இடுவதற்குமுன் அவன் அந்த அலுவலை முடிக்கும் ஆற்றல் உள்ளவனா என்று நன்றாகத் தெரிந்த பின்னரே கொடுக்கவேண்டும். கொடுத்த பின்னர் அவனிடத்து முழுப்பொறுப்பும் விடுதல்வேண்டும். யாரும் இடையில் தலையிடுதல் கூடாது.

ST. VALLUVAR'S SAYINGS

'THIS man, this work shall thus work out' let
thoughtful king command;
Then leave the matter, wholly in his servant's hand.

Note

The magnitude of the work and the capacity of the man to whom that work is entrusted should be well thought out before entrusting the work. Once entrusted no one should interfere however great he may be.

வள்ளுவர் வாய்மொழி

அன்பறிவு தேற்றம் அவாவின்மை யிந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு.

குறிப்பு

அரசியல் பொறுப்புள்ள அலுவல்களில், ஆட்சியில் பற்றும், அன்பும், அறிவும், தெளிவும், பேராசை அடையாப் பெருங்குணமும் வாய்ந்தவர்களையே அமர்த்தல் வேண்டும்.

## ST. VALLUVAR'S SAYINGS

A loyal love with wisdom, clearness, mind from avarice free;
Who hath these four good gifts should ever trusted be.

### Note

In selecting the responsible officers of the state the choice should fall on those who have the sense of loyalty, knowledge of the subject, clearness of vision and freedom from avarice to their credit.

வள்ளுவர் வாய்மொழி

நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

### குறிப்பு

பிற நாட்டிடத்துத் தூது செல்வோர் அந்நாட்டு மக்களைப் பற்றியும், அங்கு நடக்கும் ஆட்சி முறையைப் பற்றியும், மக்களின் பழக்க ஒழுக்கங்களைப் பற்றியும், பொதுவாக அந் நாட்டவர் மனப்பான்மையைப் பற்றியும் நன்றாக உணர்ந்தவர்களாக இருத்தல் வேண்டும். இல்லையேல் தூது செல்பவர்கள் செய்கின்ற எவ்வகைப்பட்ட நன்மையும் பயன்படாததாகும்.

## ST. VALLUVAR'S SAYINGS

THOUGH well the work be done, yet one mistake
is made,
The habitudes of various men when no regard is paid.

### Note

The ambassadors should have a clear and complete knowledge of the people and administration to which they are sent; besides, they should have entered into the spirit that regulates the ways and forms of thinking and living of those people. Without this, it is possible to have their mission failed not withstanding the good and noble work done by an ambassador.

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானுங் கெடும்.

## குறிப்பு

இவ்வுலகம் கருத்து வேற்றுமை நிறைந்துளது. இன்றி அமையாத பல பொருள்களைப் பற்றியும் கருத்துக்கள் வேறு பட்டுள்ளன. தம்மோடு மாறுபட்ட கருத்தைத் தக்கவாறு ஆராயாமல், தலையெடுக்க ஒட்டாது ஆழ்த்தும் எந்த ஆட்சியும் நலியக்கூடியதேயாம். இத்தகைய ஆட்சியை நலியச்செய்வதற்கு வேறு பகைவர்கள் வேண்டாவாம். மாற்றுக்கருத்தே ஆட்சியின் மாட்சியாம்.

ST. VALLUVAR'S SAYINGS

THE king with none to censure him, bereft of
safeguards all,
Though none his ruin work, shall surely ruined fall.

Note

World is full of difference in opinions on vital subjects. If any administration, by the strength of its power, crushes any opposing views without due consideration, it is doomed to fall even without any enemies working against it. Opposition is the strength of a Government.

வள்ளுவர் வாய்மொழி

இடிக்குந் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

குறிப்பு

ஆட்சியில் தவறு கண்ட இடத்து இடித்துக் கூறித் திருத்தும் பெரியார் துணைக்கொண்டு ஆட்சி நடத்தப்பெறின், அவ்வாட்சியை அழிப்பார் யாரும் இல்லை. இந்தச்செய்யுளில் எதிர்த்து உண்மை கூறுவாரைப் போற்றவேண்டும் என்பது வலியுறுத்தப்பெறுகிறது.

ST. VALLUVAR'S SAYINGS

WHAT power can work his fall, who faithful ministers
Employs, that thunder out reproaches when he errs.

## Note

The benefits of opposition in a Government are rigthly emphasised. Our saint says that nothing in the world can change an administration which supports the thundering voice of the opposition.

வள்ளுவர் வாய்மொழி

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கொளல்.

## குறிப்பு

உலகில் அமைதி நிலவுவதற்கு ஒவ்வொருநாடும் செய்யத் தக்கவை என்ன என்பதை இக்குறள் விளக்குகிறது. நேய நாடுகட்கு உதவி புரிவது வேண்டியதே எனினும், விரைந்து செய்ய வேண்டியது, பகை நாடுகளின் வேற்றுமைக்குரிய காரணங்களை நீக்கி, அவைகளை நேய நாடுகளாக ஆக்கிக்கொள்ள வேண்டுவதேயாகும். இது உலக அமைதிக்குச் சிறந்ததொரு வழியாம் என்பது தெளிக.

## ST. VALLUVAR'S SAYINGS

THAN kindly acts to friends more urgent thing to do
Is making foes to cling as friends attached to you.

### Note

The contribution of each country towards the maintenance of universal peace is indicated in the above couplet. Allied countries are always helpful to each other and will not hesitate any kindly act; this will help to promote international welfare of a group of nations; but pacifying the differences and getting friendly with enemies is sure to contribute to the universal peace. So, such opportunities should be embraced without loss of time.

வள்ளுவர் வாய்மொழி

எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும்
உட்பகை யுள்ளதாங் கேடு.

குறிப்பு

நாட்டுக்குள் உட்பகை ஒரு சிறிதளவேனும் வளர்வதற்கு இடமளித்தல் கூடாது. இடம் கொடுப்பின், அவ்வுட்பகை பெரும் பகையாய் வளர்ந்து பெருங்கேட்டை விளைவிக்கும்.

THOUGH slight as shred of sesame seed it be
Destruction lurks in hidden enmity.

### Note

Internal dissensions should not be allowed to remain even in a minutest measure. Such dissensions are sure to develop themselves to the dangerous position of an internal war.

வள்ளுவர் வாய்மொழி

உயிர்ப்ப உளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

## குறிப்பு

மாறுபாடுடைய நாடு தன் எண்ணங்களில் பெருமிதம் கொள்ளுமாறு விட்டு நிற்கும் எந்த நாடும் உரிமையுடன் வாழ இயலாது. பகைவர்கள் பெருமிதத்தைத் தொலைக்கவேண்டுவது நாட்டின் கடமையாம்; படையெடுப்பவரைத் தாழ்த்திருப்பது பயனில் செயலாய் முடியும்.

BUT breathe upon them, and they surely die,
Who fail to tame the pride of angry enemy.

### Note

If an encroaching enemy is allowed to be proud of his plans, no country can have any independent existence. So the pride of an enemy country should be shattered before invasion.

இளைதாக முள்மரம் கொல்க; களையுநர்
கைகொல்லும் காழ்த்த விடத்து.

## குறிப்பு

அயல் நாடுகளில், தன் நாட்டோடு பகைகொள்ளக்கூடிய எண்ணங்கள் எள்ளளவும் வெளிப்படாது சிறிய அளவில் தோன்றினும், அதனைத் தெரிந்து, தொடக்கத்தே சிர்பெறச் செய்வது ஒவ்வொரு நாட்டிற்கும் கடமையாம். பகைமைக் கருத்துக்களை வளரவிடின், பின்னர் அணுகுவதும் இயலாது. நெருங்குவோரைப் புண்படுத்தவுங்கூடும். இவ்வுண்மை, உருவகத்தால் இக்குறளில் காட்டப்பெறுகிறது.

DESTROY the thorn, while tender plant can
work thee no offence;
Matured by time, 't will pierce the hand that
plucks it thence.

## Note

It is the duty of the administrators of a country to discern any inimical idea that may appear in however insignificant form in adjoining countries. Then, it will be easier to set aright things. If such ideas are allowed to develop, it will be hard of approach and may bruise him who approaches. This truth is metaphorically expressed in the above couplet.

வள்ளுவர் வாய்மொழி

அறிவின்மை இன்மையுள் இன்மை; பிறிதின்மை
இன்மையா வையா துலகு.

## குறிப்பு

நாகரிகம் மிக்க உலகில் மக்களுக்கு வேண்டுவன பல. அவற்றையடையும் வழியும் பலவாக அமைந்துள்ளன. வேண்டப்படுவனவற்றுள் பல உண்மையாகவே வேண்டப்படுவன அல்ல. பல வேற்றுப் பொருள்களால் தணித்துக் கொள்ளக்கூடியன. ஆனால், வேண்டப் பெறுவனவற்றுள் முதன்மை இடத்தைப் பெறும் அறிவினும் சிறந்தது வேறில்லை. அது குறையுமாயின், மக்களும் நாடும் அடையும் அல்லல்கள் பல. எனவே, அறிவைத் தோன்றச்செய்து பெருக்கிப் பரப்பவேண்டுவது ஆட்சியின் கடமையாம். அறிவுடையாரே அறிவைப் பரப்ப வல்லார். ஆதலால் அறிவே நாட்டின் வலிமை.

## ST. VALLUVAR'S SAYINGS

WANT of knowledge, 'mid all wants the sorest
want we deem;
Want of other things the world will not as want
esteem.

### Note

The wants of a man in a civilised society are many. The ways for satisfying the wants are also many. Several wants can be replaced and several wants are imaginary. No want in a man will be as disastrous to self and society as the want of knowledge. So, it is the duty of the Government to spread knowledge, to create, develop and spread knowledge with the help of men of real knowledge.

வேலன்று வென்றி தருவது; மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்.

## குறிப்பு

நிலைத்த அமைதியைத் தரக்கூடிய வெற்றி படைச்சிறப்பால் வருவதொன்றன்று. திட்டமான சட்டங்களும், அவற்றை ஓரமற்றுச் செலுத்தும் ஆட்சித் திறனுமே வெற்றி என்னும் உயர்வுக்கு உரிய வெற்றியைத் தருவனவாகும்.

NOT lance gives kings the victory,
But sceptre swayed with equity.

### Note

The victory assuring permanent peace is not gained by the superior strength of the armed forces. It is the system of perfect laws and impartial methods of administering them, that gives the victory worth its name.

வள்ளுவர் வாய்மொழி

தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

குறிப்பு

உள்ளத்திலும் வாழ்க்கையிலும் தூய்மையுடையன் ஆதலும், கேள்வி ஞானமும் நூலறிவும் நன்குள்ள அறிஞரின் துணையுடையனாதலும், கொள்கையில் மாறாத துணிவுடையன் ஆதலும், உண்மையைப் பிறர் மனம் பதியும் வண்ணம் உரைக்கும் நாவன்மையுடையனாதலும் தூதனுக்கு இன்றியமையாதன ஆகும்.

## ST. VALLUVAR'S SAYINGS

INTEGRITY, resources, soul determined truthfulness,
Who rightly speaks his message must these marks possess.

### Note

Purity of heart and life, association with men of erudition and resourcefulness and a strong determination to pursue his mission are the three qualities required for an ambassador who has got the capacity to convincingly express the truth for which his country stands.

## வள்ளுவர் வாய்மொழி

பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும்; சிறப்பொவ்வா;
செய்தொழில் வேற்றுமை யான்.

## குறிப்பு

மக்கள் பிறப்பால் உயர்ந்தோர் தாழ்ந்தோர் அல்லர். அவரவர்கள் செயலால்தான் உயர்வும் தாழ்வும் ஏற்படுகின்றன. நாட்டிற்பிறந்த ஒவ்வொருவருக்கும் அவரவர்கள் திறமையோடு தங்கள் அலுவல்களைச் செய்ய வாய்ப்புத்தருதல் வேண்டும். அங்ஙனம் வாய்ப்புக் கொடுத்த இடத்து அவரவர்கள் அலுவல்களில் மேம்பாடு காணலாம். பிறப்பு முதலியவை, மேம்பாடு அடைதற்கு ஒரு தடையாக இருத்தல் கூடாது.

## ST. VALLUVAR'S SAYINGS

ALL men that live are one in circumstance of birth;
Diversities of works give each his special worth.

### Note

All men are born equal. It is only the subsequent circumstances of life that makes them great or small. So it is an unwise policy for any state to give preferences according to the accidents of birth. Equal opportunity should be given to all men born in a state. The greatness of any man depends on his mental and moral qualities and he rises or falls according to the deeds he performs. The society should break all barriers of preferences and prerogatives.

வள்ளுவர் வாய்மொழி

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

## குறிப்பு

ஆட்சி நடத்துங்கால் எதிர்ப்பை வரவேற்கவேண்டும் என்பதையும், எதிர்த்துக் கூறுவோர் எவ்வளவு கைக்குஞ் சொல்லால் கூறினும் அவற்றை ஆய்ந்து தக்கமுறையில் ஏற்று ஆவன செய்யவேண்டும் என்பதையும் இக்குறள் வலியுறுத்துகின்றது. அன்றியும் இத்தகைய செயலே தம்மை ஆட்சியில் நெடுநாள் நிலைத்திருக்கச் செய்யும் என்ற இன்னுரையையும் பகர்கின்றது.

## ST. VALLUVAR'S SAYINGS

THE king of worth, who can words bitter to his
ear endure,
Beneath the shadow of his power the world
abides secure.

### Note

The importance of opposition in any good form of Government is emphatically expressed by our saint. He requires the administrators of the state to be not only tolerant towards opposition but get profitted by paying attention to the opposing views even when they are expressed in the most unpleasing way, bittering their ears. Our saint gives temptation to those that are in power saying this quality will increase and extend their power continuously

## மக்கள் மதிப்பு

அவமதிப்பும் ஆன்ற மதிப்பும் இரண்டும்
மிகைமக்க ளான்மதிக்கற் பால—நயமுணராக்
கையறியா மாக்கள் இழிப்பும் எடுத்தேத்தும்
வையார் வடித்தநூ லார்.

— நாலடியார்.

### குறிப்பு

ஆட்சியாளர், தாம் நடத்தும் அரசியலைக் கல்வி கேள்விகளில் உயர்ந்தோர் எவ்வாறு மதிப்பிடுகிறார்கள் என்பதனை உணர்ந்து, குற்றங் குறைகள் இருப்பின் தம்மைத் திருத்திக் கொள்ளல் வேண்டும். கல்வி கேள்வி முதலிய இல்லாப் பிறர் தூற்றுதலையும் போற்றுதலையும் ஒரு பொருளாக எண்ண வேண்டுவதின்று. இதுதான் நூலை ஆராய்ந்த பெரியோர் கருத்தாகும். நாலடியார், திருக்குறளோடு வைத்து எண்ணப்படும் உயரிய நீதிநூலாகும்.

## PUBLIC OPINION

BLAME or praise, when comes from great
Men of learning and sane views,
We should take and get reformed;
Who will stoop to hear the voice
That comes from low as praise and blame?
Essence of learning teaches so!

—*Naladiar.*

### Note

Any cultured society considers the public opinion as an all powerful factor in regulating the affairs of the state. Leaders of nation are guided by that. In the above poem, the saintly author advises us to distinguish between the opinions that are to be respected and those that are to be rejected. The value of the voice is judged from the emanating place. Naladiar is a didactic work of great value counted along with Tirukkural.

குரங்கின் கைக் கொள்ளி

உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை
அடக்கமில் உள்ளத்த னாகி—நடக்கையின்
ஒள்ளியன் அல்லான்மேல் வைத்தல் குரங்கின்கைக்
கொள்ளி கொடுத்து விடல்.

— பழமொழி.

## குறிப்பு

இது பதினெண் கிழ்க்கணக்குகளில் ஒன்றாகிய பழமொழி என்னும் நூலிலிருந்து எடுக்கப்பெற்றது. மிகப் பழங்காலத்துப் பெருவழக்கிலிருந்த பழமொழிகளை அடிப்படையாக வைத்து இதனை முன்றுறையரையனார் என்னும் பேரறிஞர் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் இயற்றியிருக்கிறார். உலகில் உள்ள பல தகுதிகளை மக்கள் செல்வநிலையாலும் வேறு ஆதரவுகளாலும் அடைகின்றார்கள். இவ்வாறு அடைகின்றவர்கள் அடக்கமும், நற்பெயரில்நோக்கமும் இல்லாராயின், பரந்த தீங்கு விளையும் என்பதை மேற்செய்யுள் வலியுறுத்துகின்றது.

## MONKEY WITH A BURNING STICK

TO raise a man because of wealth
To places high and leading,
When he hasn't got control
Of his self and passions,
And in conduct low and base,
It is to give the burning stick
In the hands of monkey.

—*Pazhamozhi.*

### Note

This passage from *Pazhamozhi*, an ancient collection of Tamil proverbs by a chieftain named Munthurai Araiyanar, emphasises the qualities that are necessary in a man, who is made to occupy important positions in the society. The danger of raising people without those qualities is well illustrated by the proverb, "Giving the burning stick in the hands of monkey".

## என் நாட்டின் நீதி

கண்ணகி,
கோயில் மன்னனைக் குறுகினள் சென்றுழி
நீர்வார் கண்ணை எம்முன் வந்தோய்
யாரை யோநீ மடக்கொடி யோய்எனத்
தேரா மன்ன செப்புவ துடையேன்
எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண் தீர்த்தோன்; அன்றியும்
வாயில் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத் தான்தன்
அரும்பெறல் புதல்வனை ஆழியின் மடித்தோன்
பெரும்பெயர்ப் புகார்என் பதியே.

— சிலப்பதிகாரம்.

### குறிப்பு

தமிழ்நாட்டின் நீதிமுறையை இச்செய்யுட்பகுதி விளக்குகின்றது. கண்ணகி தன் குறையைத் தெரிவித்துக்கொள்ள மன்னன் அவையை அடையும் எளிய நிலையும், அஞ்சாது தன் குறையைக் கூறும் வீரமும், தான் தோன்றிய நாட்டின் மன்னர்கள் நீதிவழங்கும் சிறப்பை எடுத்துக்கூறும் பெருமிதமும் ஆகிய இவைகள் கருதற்பாலனவாம். சிலப்பதிகாரம் தனித் தமிழ்க் காப்பியமாகும். சங்க காலத்தது.

## JUSTICE IN MY LAND

"OH! who are ye, eyes in tears?"
Asked the king. And she replied:
"Oh! you king of confused mind,
I with complaint here have come;
I come from Pugar famed for justice
Where the ruler gave himself
Just to save a hostage bird;
Mind you, Oh king! he gave his body
To save a bird that found refuge.
A weeping cow once rang the bell
To get an audience of the king;
She lost her calf a tender one!
Who killed the calf? None but king's son
Who drove the car on lurking calf;
Accident! Accident! No thought he had
To run the car to kill the calf:
Many and many were the laws
The priests and elders gave the king
To excuse the son, the only heir.
Shook his head in disdain,
Rose the king from exalted throne,
Took his son and ran the car
Over him, who should succeed
The noble throne of Chola clan.
Thus was justice met to all.
This is the place from which I hail
That is justice we have known.

— *Silappathiharam.*

### Note

This passage is from *Silappathiharam*, an early epic of excellence. This is nearly 2000 years old.

How proud *Kannaki*, feels of her land and the justice of the rulers!

அரசே உடல்

வயிரவான் பூணணி மடங்கல் மொய்ம்பினான்
உயிரெலாம் தன்னுயிர் ஒப்ப ஓம்பலால்
செயிரிலா உலகினில் சென்று நின்றுவாழ்
உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்.

— கம்பர்.

## குறிப்பு

இச்செய்யுள் கம்பராமாயணம் என்னும் தமிழ்ப் பெருங் காப்பியத்தினின்று எடுக்கப்பெற்றது. இக்காப்பியம் பன்னிரண்டாம் நூற்றாண்டினது; இலக்கியம் வல்லோரால் பெரிதும் போற்றப்பட்டு வான்மிகத்தோடு ஒப்ப எண்ணப்பெறுவது. துளசிதாசர் இந்நூலிலிருந்தே தன் இராமாயணத்தை எழுதும் உள்ளக் கிளர்ச்சியைப் பெற்றார் என்ற ஒரு செவிவழிச் செய்தியும் வழங்குகிறது. மேலும், இச்செய்யுளில் அரசர்க்கும், குடிகளுக்குமுள்ள தொடர்பு ஒரு புதியமுறையில் சொல்லப் பெற்றிருக்கிறது. மேலைநாட்டு எண்ணங்களிலேயே இத்தகைய தொடர்பு முதன்முதலாக இந்நூலில்தான் காணப்படுவதாகக் கூறலாம். இங்குக் கூறப்பெறும் தொடர்புதான், குடியரசின் அடிப்படையான கொள்கையின் வித்து என்று கூறலாம். அரசு உடலாகவும், மக்கள் உயிராகவும் கூறப்படுவதில் மக்களாகிய உயிர் இயக்கும் வழிகளிலேதான் அரசாகிய உடல் இயங்கவேண்டும் என்ற உண்மை இந்நூலகத்து நன்கு தெரியக் கிடக்கின்றது. சென்ற காலத்தை நன்கு தெரிந்தும், நிகழ் காலத்தை நன்கு உணர்ந்தும், இனி வருங்காலத்தை எதிர் நோக்கியுமே இவ்வாறு கம்பன் முதன்முதல் தானே உணர்ந்து, தன்னறிவில் கண்டு தமிழ் மொழியிலே வெளியிட்டிருப்பது அனைவரும் தெரிந்து பெருமைப்படத் தக்கதாகும்.

## KING, THE BODY

THE king bedecked with dazzling jewels,
With strength of mighty fierceful lions,
Holding diamond sword in hand,
Guarded all the living as
He would guard the life his own.
As all the living life were his
He stood as body to the life
The world which moved his actions all.

— *Kamba Ramayanam.*

### Note

This passage is from Kamba Ramayanam, a Tamil epic of the 12th century A. D. It is held in high esteem by all the lovers of literature and is considered to be an equal to Valmiki Ramayanam in literary merits. Traditionally it is believed that Thulasidas got his inspiration through this work. In the above passage, a new turn is given to the political concepts of the relation between the ruler and the ruled. The fundamental principle of democracy finds an important place in the above passage; most probably for the first time in the oriental thought. This is an original turn given by Kamban, the poet, on retrospection, experience and projection. The ruler is personified as the body, which is being animated by the subjects, the life. So, the rulers and the ruled should realise their responsibilities and act in harmony like body and soul.

### அறநெறி வழுவா மன்னன்

யாநிலங் காவலனாவான், மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால், தன் பரிசனத்தால்,
ஊனமிகு பகைத்திறத்தால், கள்வரால், உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த்து அறங்காப்பான் அல்லனோ.

— சேக்கிழார்.

## குறிப்பு

இச்செய்யுள் பெரியபுராணத்தினின்றும் எடுக்கப்பெற்றது. இதன் ஆசிரியர் எண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்டவர். அறநெறி வழுவா மன்னர்க்கு உரிய கடமையை நன்கு விளக்குகின்றார். யார் யாரால் வரும் இடையூறுகளை விலக்கவேண்டும் என்று கூறும் இடத்துத் தன்னால், வரும் இடையூற்றை விலக்க வேண்டுமென்பது கூறப்பெற்றது குறிப்பிடத்தக்கது.

## VIRTUOUS RULER

VIRTUOUS king is he, who sways
Over domains vast and protects
Subjects from oppressive fears five:
By self, by following, by thieves,
By foes foul and animals wild.

— *Sekkilar.*

### Note

This is from *Periyapuranam*, "Lives of Saints" sung by Sekkilar, some 800 years ago. The poet defines the duties of a virtuous king in clear terms. His reference to avoid oppression by the king himself is to be particularly noted.

காடு

கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டின்
கடும்புலி வாழும் காடு நன்றே.

— வெற்றிவேற்கை.

## குறிப்பு

இச்செய்யுள், நாடாண்டு தன் வாழ்நாளிலேயே பல வகைப்பட்ட கடுமையான மாறுதல்களைக் கண்ணுற்ற சுந்தர பாண்டியன் என்னும் அரசரால் எழுதப்பெற்றது. சினஞானியான கணபூசியார் வாழ்க்கையில் நிகழ்ந்த கிழ்க்கண்ட வரலாற்றுடன் இச்செய்யுளை ஒத்துப்பார்க்கப் பயன் தரும்.

“தாய்மலையின் அருகில் கணபூசியார் போய்க்கொண்டிருக்கும்பொழுது ஒரு கல்லறையின் அருகில் அழுதுகொண்டிருந்த ஒரு பெண்பிள்ளையைப் பார்த்தார். தன் வண்டியிலிருந்து சிறிதுபொழுது பார்த்தபின்னர், இச்சுலு என்பவரை அவள் துன்பத்துக்குக் காரணம் என்ன என்பதைக் கேட்டு வரும்படிச் சொன்னார். ‘துன்பத்தின்மேல் துன்பம் அடைந்தவள்போல் அழுகின்றாயே’ ஏன்? என்று சூலு கேட்டார். அப்பெண் ‘அப்படியேதான். என் கணவனின் தந்தை இவ்விடத்திலேயே ஒரு புலியால் கொல்லப்பட்டார். என் கணவனும் அப்படியே ஆனார். அதே விதி இப்போது என் மகனுக்கும் நேர்ந்தது’ என்றாள். கணபூசியார், ஏன் இவ்விடத்தைவிட்டு அவள் பெயரவில்லை என்று கேட்டதற்கு, ‘இவ்விடத்தில் கொடுங்கோல் அரசாங்கம் இல்லை’ எனப்பகர்ந்தாள். கணபூசியார் மாணவர்களைப் பார்த்து, ‘பிள்ளைகளே நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். கொடுங்கோல் ஆட்சி புலியினும் கொடிது’ என்றார்.”

## JUNGLE

BETTER to live in jungle,
Where the fearful tigers live,
Than to live in land
Where the kings oppress.

— *Sundara Pandiyan.*

### Note

This comes from the pen of a ruling prince who has seen dynamic changes in his life time. He belongs to the sixteenth century and is known as Sundara Pandiyan. The following passage from the life Confucius may be profitably compared.

"As Confucius was passing by the side of the Tai mountain, there was a woman weeping and wailing by a grave. Confucius bent forward in his carriage, and after listening to her for some time, sent Tsze-lu to ask the cause of her grief. 'You weep as if you had experienced sorrow upon sorrow' said Tsze-lu. The woman replied. 'It is so. My husband's father was killed here by a tiger and my husband also; and now my son has met the same fate.' Confucius asked her why she did not remove from the place, and on her answering, 'There is here no oppressive Government,' he turned to his disciples and said 'My children, remember this. Oppressive Government is fiercer than a tiger."

## அரசரா? கள்வரா?

இன்று கொளற்பால நாளைக் கொளப்பொருள்
நின்று குறையிரப்ப நேர்படான்—சென்றொருவன்
ஆவனா கூறின் எயிறலைப்பான் ஆறலைக்கும்
வேடலன் வேந்தும் அலன்.

— குமரகுருபரர்.

### குறிப்பு

இச்செய்யுளை இயற்றியவர், தருமபுர ஆதீன முனிவர்களில் ஒருவரும், திருப்பனந்தாள், காசிமடத்து முதல்வரும், மதுரையை ஆண்ட திருமலைநாயக்கராலும் தில்லிமாநகரத்தின் முகலாயச் சக்கரவர்த்திகளாலும் போற்றப்பெற்றவரும், முந்நூறாண்டுகட்கு முன்னர் வாழ்ந்து, தேனினும் இனிய தெய்வக் கவிகளருளியவருமான குமரகுருபர சுவாமிகள் ஆவார்.

இச்செய்யுளில் அமைந்த நீதியாவது, மக்களிடத்து அருளில்லாது வரி வாங்குவதும், குறைகளைக் கேட்காது திருப்புவதும், நாட்டுக்கு நல்லன கூறுவாரை வெருட்டலும் ஆள்வோர்க்குரிய குணங்களே அல்ல என்பதாம். அவ்வாறு இருப்பின் அத்தகைய குணமுடையாரை ஆட்சிக்குத் தகுதியுடையரா? வழிப்பறிசெய்யும் கள்வரா? என்று அடிகள் ஐயப்படுகிறார். துளசிதாசர் நம் அடிகளின் அறவுரைகளைக் கேட்டுப் பெரும் பயனடைந்தார் என்பது செவி வழக்கு.

## KING OR ROBBER

IS he a king or highway robber ?
Consents not to wait a day,
To get the tax due to-day,
When with grievance people go
Even audience he denies,
For counsel good he grinds his teeth,
Is he a king or highway robber ?

— *Kumaraguruparar.*

### Note

This passage from Kumaraguruparar, a monk of Dharmapuram monastery who subsequently found a mutt at Benares and Thiruppanandal, questions the propriety of calling a man with above qualities as a king though he may be physically occupying that place. This passage emphatically stresses that the consideration in the collection of taxes, readiness to hear the grievances of the subjects, and the willingness to be benefitted by good counsel are the main qualities of any administrator. This author is a poet of saintly order and has contributed towards the expansion of Saiva Saiddhantha Philosophy and Tamil culture in the North India. He was held in high esteem by Thirumalai Naick of Madurai and Moghul emperors of Delhi and was frequently adorning those Courts.

Thulasidas was greatly benefitted by the discourses of this author. He belongs to the seventeenth century.

## நமசிவாயமூர்த்திகள்

இருதய நாப்பண் அஞ்செழுத் துருவின்
    இறைவனை, உயிர்க்கொலை செய்யாமை,
அருள், பொறி அடக்கல், பொறை, தவம், வாய்மை,
    அன்பு, அறிவு என்னும்எண் மலர்கொண்டு
ஒருமையொடு அருச்சித்திடுகஎன்று அடியர்க்கு
    ஒள்ளிய தீக்கைசெய்து உணர்த்தத்
திருஅமர் துறைசை உறையருள் குருவாம்
    திருநமச் சிவாயர்தாள் போற்றி.

— சிவஞானமுனிவர்.

### குறிப்பு

இச்செய்யுள், நமச்சிவாய மூர்த்திகளுக்கு வணக்கம் கூறும் முறையில் மாதவச்சிவஞானமுனிவர் பாடியதாகும். நமச்சிவாய மூர்த்திகள் தெய்வத்தன்மை உடையவராய்த் திருவாவடுதுறை ஆதினத்தை இன்றைக்குச் சுமார் ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னர்த்தோற்றுவித்தஅருளாளராவர். இவர்கண்ட ஆதினம், தென்னாட்டில் பலகோடி மக்களுடைய ஞானத்தையும், சமய உணர்ச்சியையும், நன்னெறியையும் நிலைபெறச் செய்வதற்கும், வளர்ப்பதற்கும் துணையாக இருந்து கொண்டிருக்கிறது. இவ்வருள்மூர்த்திகளால் கட்டளை இடப்பெற்ற நற் செயல்களும் இன்றுவரை நடைபெற்று வருகின்றன. நாட்டிலும் மக்கள் உள்ளத்தும் எத்துணையோ மாறுபாடுகள் தோன்றினும், மூர்த்திகளுடைய கட்டளையும் திட்டமும் எள்ளளவும் மாறியன அல்ல. எடுத்துக்காட்டாகத் திருமடத்தின் அடுக்களையை மூர்த்திகள் அமைத்து, அதில் பொருத்திய நெருப்பு அணையாமல் நின்று என்றும் அடியவர்களுக்கு அமுதளிக்கவேண்டும் என அருளிய திருமொழி இன்றும், உண்மையாக இருந்து வருவது உலகமறியும். இந்த ஐந்நூறு ஆண்டுகளில் நிகழ்ந்த மாறுதல்களும், பஞ்சமும் எவ்வளவோ ஆயினும் திருமடத்திலும் அதன் கிளைமடங்களிலும் இன்றுவரை பசிப்பிணியொன்று உண்டு என்பதை எவரும் அறியார். எந்த நல்ல நோக்கங்களுடன் தோன்றியதோ அந்நோக்கங்கள் இன்றும் நிறைவேறி வருகின்றன. சிவஞான முனிவர், சங்கரர், இராமாநுசர் இவர்களுடன் வைத்து எண்ணக்கூடிய ஒருபெருந்தத்துவ ஞானியாவார். முனிவர் இத்திருமடத்தின் தம்பிரான்களில் ஒருவரே.

## SAINT — NAMASIVAYA

"PLACE the letters five the God
In the centre of thy heart;
These the flowers eight you take:—
Hurting not a living thing,
Graces, the subdued senses five;
Forbearing evils done to one,
Enduring pains of extreme kind,
Speaking truth, the love to all,
Knowledge of this laws and world;
Sprinkle these at lotus feet.
Having mind united there."
Thus you said and purified
Those who came to serve thy cause,
And we worship at thy feet
Oh! Namasivaya of Thuraisai fame.

*—Sivagnana Munivar.*

### Note

This poem in praise of St. Namasivaya Moorthy was composed by Sivagnana Munivar some two hundred years ago. St. Namasivaya Moorthy is the founder of Thiruvavaduthurai Mutt. By this institution he has contributed in an extra-ordinary measure towards the welfare and development of mental, moral and religious sides of people of South India. All the good deeds commenced by him are being continued even to-day in spite of several changes in seciety and administration. It is said when he planned the oven he desired that the fire placed on that day should continue for ever without rekindling. The same fire continues even to-day a period of five hundred years. Thousands are fed and the places associated with the mutt have not seen famine in spite of several famines in these five hundred years. The spiritual, religious, and cultural traditions are being maintained with honour till this day. Sivagnana Munivar, the author of the poem is an intellectual giant who as commentator of philosophic works should be ranked along with Sankara and Ramanuja.

விண்ணப்பம்

அத்தா நான் வேண்டுதல்கேட்டு அருள்புரிதல் வேண்டும்
அருட்பெருஞ் சோதியைப் பெற்றே அகங்களித்தல் வேண்
செத்தாரை மீட்டுமிங்கே எழுப்பியிடல் வேண்டும் [டும்
திருச்சபைக்கே அடிமைகளாய்ச் செய்வித்தல் வேண்டும்
ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்
ஒருமையுள ராகிஉல கியல்நடத்தல் வேண்டும்
எத்தாலும் அழியாத வடிவதிலே நானும்
எந்தாயும் ஒன்றாக இனிதுறல் வேண்டுவனே.

— இராமலிங்கர்.

## குறிப்பு

சென்ற நூற்றாண்டில் அருளாளராகத் திகழ்ந்த இராமலிங்க அடிகளது திருவருட்பாவினின்று இச்செய்யுள் எடுக்கப்பெற்றது. அடிகள் பெருங்கவியாகவும், தத்துவ ஞானியாகவும் இருந்ததோடு, அன்பை ஒரு சமயமாக உலகில் பரவச் செய்த மக்கட்பண்பாளராவார். அவர் செய்யுட்கள் உள்ளத்தை உருக்கும் இனிய மொழியில் அமைந்து, எல்லோருள்ளத்தும் உடனே எதிரொலி எழுப்ப வல்லனவாக உள்ளன. இந்தச் செய்யுளில் மக்கட் பண்பையே மறந்து, அப்பண்பு இறந்தவர்களாகக் கருதவேண்டிய நிலையில் உள்ள மக்களெல்லாம் அப்பண்பைப் பெற்று மக்களாக உயிர்பெற வேண்டும் என்று வேண்டுவதுடன், எவ்வகையிலும் உயர்வு தாழ்வு வேற்றுமை இல்லாத ஒரு மக்கட்கூட்டம் தோன்றவேண்டும் என்றும், உலகமென்னும் ஓர் உடலில் மக்கட் கூட்டமென்னும் ஒன்றுபட்ட உயிர் கூடி இனிமையாக உலகியலை நடத்தவேண்டும் என்றும் எல்லோரையும் ஆண்டவன் வழிபாட்டில் கொண்டுவந்து சேர்த்து நிலைத்த பேரின்பம் பெறச் செய்ய வேண்டுமென்றும் வேண்டுகிறார்.

## MY APPEAL

THOSE that are Dead to Noble life,
Should get their life and live again;
High and Low should disappear,
As equals all should live in world;
One in soul the world should live,
And offer themselves at Thy feet;
I should live in changeless state
One with you my God! my father!
This is my appeal, hear and grant!

— *St. Ramalingar.*

### Note

This is a passage from the poems of St. Ramalingar who lived in the last century. Besides being a poet and philosopher our saint is a very great humanitarian who spread the cult of love to all beings. His verses are in a simple soul stirring language which finds ready response in all hearts. In the above passage he prays for the regeneration of men who have become dead to human values and envisages a society without any distinction, inequality, and differences of any kind; and further prays that all human beings should feel one in soul and conduct the affairs of the world with an harmonious freedom. Finally he prays that he should be helpful in bringing the mankind to the service of God and making the humanity reach the eternal bliss.

### இதயத்திலே இருக்கிறார் இறைவன்

வெண்ணெயுற்றும், நெய்தேட வேண்டுமா? தீபமுற்றும்,
நண்ணும் கனல்தேடல் நன்றாமோ? — என்மனத்தை
நாடிச் சிவனிருக்க நாடாமல் ஊர்தோறும்
தேடித் திரிவதென்ன செப்பு.

—சீகாழி அருணாசலக்கவிராயர்.

குறிப்பு

இவரது ஊர் தில்லையாடி; தந்தை நல்லதம்பிப்பிள்ளை; தாய் வள்ளியம்மையாச்சி; ஆசிரியர் அம்பலவாணத்தம்பிரான். ஆதரித்தவர் - சிதம்பரம்பிள்ளை. சீகாழியில் வசித்தமையால் சீகாழி அருணாசலக்கவிராயர் எனப்பட்டார். காலம் சாலிவாகன சகம் 1634-ல் தோன்றியவர். செய்த நூல்கள் இராம நாடகம், அயமுகி நாடகம், சீகாழிப்புராணம், அனுமார் பிள்ளைத்தமிழ் முதலியன.

ஆடம்பரமாகக் கூட்டங்கூட்டிக்கொண்டு தலயாத்திரைச் சென்றுவந்த நண்பர் சிலருக்கு அறிவுறுத்த இவர் அருளிய செய்யுள் இது. வெண்ணெயைவைத்துக்கொண்டு நெய்க்கு அழுவார் உண்டா? கையிலே விளக்கு வைத்துக்கொண்டு நெருப்பு தேடுவாருண்டா? சிவன் நம் ஒவ்வொருவருடைய சிந்தையிலும் இருக்கிறார். அப்படியிருக்க ஊர் சுற்றியலைவது என் என்கிறார்.

## IMMANENCE OF GOD

WHY seek ghee, butter in hand!
Candle in hand wherefore search for fire!
With Siva enshrined in my heart,
Why then seek Him in World outside!

— *Sirkazhi Arunachala Kavirayar.*

### Note

Poet Arunachala Kavirayar was born at Tillaiyadi. His father was Nallathambi Pillai and his mother Valliyammai. He received his education under Ambalavana Thambiran and was patronised by Chidambaram Pillai. As he lived in Sirkazhi he came to be known as Sirkazhi Arunachala Kavirayar. He lived during Salivahana Sakabhda 1634. Some of his works are Rama (a play), Ayamukha (a play), Sirkazhi Purana, Anumar Pillai Tamizh. His fame rests on his protraying his own feelings in his plays.

The above verse was sung by him, to some of his friends returning from pilgrimages, to make them seek God within their own hearts instead of searching for Him in ostentatious pilgrimages to different places. Such outward pilgrimages are like crying for ghee with butter in hand and asking for fire while having a lamp in hand.

அழகால் அன்றும் – இன்றும்

கச்சிருக்கும் போது கரும்பானேன் கைக்குழந்தை
வச்சிருக்கும் போது மருந்தானேன் — நச்சிருக்கும்
கண்ணார் கரும்பானார்; காணவும் நான் வேம்பானேன்;
அண்ணா மலையரசுக் கு.

— சுப்பிரதீபக்கவிராயர்.

## குறிப்பு

மதுரை மாவட்டத்திலே திருமங்கலத்திலே பொற்கொல்லர் மரபிலே பிறந்தவர். சிறந்த கவிஞர். நிலக்கோட்டைச் சமின்தார் கூழப்ப நாயக்கரால் ஆதரிக்கப்பெற்றவர். கூழப்ப நாயக்கர் காதல், விறலிவிடு தூது முதலியன இவர்செய்த நூல்கள்.

ஒரு தலைவி, தான் குமரியாயிருந்தபோது கணவனுக்குக் கரும்புபோல இனிமையாய் இருந்தேன். ஒரு குழந்தை பெற்றவுடன் வேம்புபோலக் கசந்தேன். என் மாற்றாள் கரும்பானாள் என்று வருந்துகிறாள். (கருத்து : இறைவன்பால் ஒன்றுபட்ட மனம்வேண்டும் என்பது)

## BEAUTY IS FLEETING

Sweet as sugar, comely woman was I,
With child, a bitter pill, turned I;
My rival sweetened, while I
Tasted neem, O! Lord Annamalai!

— *Supradeepa Kavirayar.*

### Note

Supradeepa Kavirayar, a goldsmith by birth, hailing from Tirumangalam in Madurai District, was a skilled versifier, Patronised by Koozhappa Naick Zamindar of Moolakottai, he wrote several works, chief of them being Koozhappa Naick's love and Viralividu Dhoodhu. His poems truly portray the feelings of affection and love binding husband and wife.

In this verse he points out the efficacy of Oneness of mind with God. A distracted mind will not lead to realisation of God. He likens such a state of mind to the attitude of a husband towards his wife, which is one of love when she is young and attractive but bitter like neem when she gives birth to a child and what is worse, one of revulsion in the presence of a cowife whose face charms him.

## பணமுள்ளவரை உறவு

நீருள்ள மட்டும் குளநாடும் பட்சி நிதிமடவார்
சீருள்ள மட்டுந் தொடர்வார்உத் யோக சிலாக்கியமாம்
பேருள்ள மட்டும் உறவாடிப் பின்பு பிரிந்திடுவார்
பாருள்ள மட்டும் பழிச்சுமை தாங்கிய பாவிகளே.

— வேதநாயகம்பிள்ளை.

### குறிப்பு

திருச்சிராப்பள்ளிக்கு அருகில், வேளாண்குளத்தூரிலே சவேரிமுத்துப்பிள்ளை என்பவரின் மகனாகப் பிறந்தவர். சீகாழி மாயூரம் முதலான இடங்களில் (டிஸ்டிரிக்ட் முன்சிப்) மாவட்ட நீதிபதியாக இருந்தார். திருவாவடுதுறை ஆதின மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் தலைமாணாக்கர். கி. பி. 1889 ஜூலை மாதம் ஞாயிற்றுக்கிழமை இறந்தார். இவர் செய்த நூல்கள் நீதிநூல், சருவசமயக் கீர்த்தனை, பிரபதாமுதலியார் சரித்திரம், பெண்மதிமாலை முதலியன.

தண்ணீர் உள்ளவரையில் பட்சிகள் குளத்தை நாடும். பணமுள்ளவரையில் பாவையர் விரும்புவர். உத்யோகம் உள்ள வரை ஊரார்கள் சுற்றிச்சுற்றி வருவார்கள். பின்பு பிரிந்துபோய் விடுவார்கள் என்று தாம் ஓய்வுபெற்றபோது மக்கள் தம்மை மதியாத தன்மையை எடுத்துக்காட்டுகிறார்.

## ADORATION OF POWER AND PELF

BIRDS frequent lakes till waters last,
Damsels cling to affluence, when in bloom;
Mean minds live a burden to earth
Claiming kinship in power and pelf,
And forsaking when glory fades.

— *Vedanayagam Pillai.*

### Note

Vedanayakam Pillai a recent poet belonging to Vellala Community was born in Tiruchirappalli. Graduating in Law he served as District Munsiff in Sirkhazhi and Mayuram. He claimed the honour of being a beloved pupil of the learned Vidwan of Thiruvavaduthurai Adheenam, Meenakshi Sundaram Pillai. He is the author of Sarvasamaya Samarasa Keerthanai, Prathapa Mudaliyar Charitram, the first Tamil Novel to be published and Penmadhimalai.

His works reflect not only his legal acumen but the literary and cultural condition of society in the latter half of the nineteenth century.

In these lines he points out how mean men are selfish to the core. They respect and keep company with persons in power and wealth but desert them when they are devoid of power. He brings out his idea by simple examples. Birds adhere to lakes only when there is water. Women love and respect men only when they are rich and powerful, but desert them when they become old and poor.

### உறுதிச்சொல்லின் அளவு

செய்வேன் எனச்சொல்லிச் செய்யா உலோபரைப்போற்
பெய்வேன் எனக்காட்டிப் பேர்முகிலே – மைவானில்
ஓடுவாய்; நிற்பாய்; உருமுவாய்; மின்னுவாய்;
நீடுவாய்; பின்பெய்யாய்; நீ.

— வேதநாயகம்பிள்ளை.

### குறிப்பு

ஆரவாரம் செய்யும் மேகங்களை முன்னிலைப்படுத்தி, உலகத்திலே உலோபிகள் இதைச்செய்வேன்; அதைச்செய்வேன் எனச்சொல்லி அலைக்கழித்துவிட்டு, ஒன்றுமே உதவாமல் உதறித்தள்ளும் நிலைக்கு வருந்திக் கூறியது.

## THE MISER'S PROMISE

MISER, thy words that soar to heaven,
May fall to earth in deed;
Like a cloud with varied forms,
Stopping, thundering, flashing not pouring.

*— Vedanayagam Pillai.*

### Note

This verse, exposes the mean nature of a miser. A miser makes hopeful promises which become void in actual practice. He resembles the cloud in the azure sky which roars with thunder, flashes with lightning but passes on without a drop of rain.

நடுவு நிலை

நடுவுநின் றார்க்கன்றி ஞானமும் இல்லை;
நடுவுநின் றார்க்கு நரகமும் இல்லை.
நடுவுநின் றார்நல்ல தேவரும் ஆவர்
நடுவுநின் றார்வழி நானும்நின் றேனே.

— திருமூலர்.

## குறிப்பு

சமய உலகில் சிறந்த சிர்திருத்தம்செய்த சிவயோகி இவர். சித்தமரபில் வந்தவர். தியானயோகமட்டும் சமயப்பணியாகாது மக்களுக்குக் காலமறிந்து செய்யும் பணியும்வேண்டும், அதுவே சிவப்பணி என்பதை வற்புறுத்தியவர். திருவாவடுதுறையிலே படரரசமரத்தின் நிழலிலே தவம் செய்தவர். அவர் செய்த திருமந்திரம் மூவாயிரத்துள் ஒன்று இச்செய்யுள். நடுவுநிலை தவறாதவர்கட்கே ஞானம் உண்டு. நரகம் இல்லை. அவர்களே தேவர்கள். அவர்கள் சென்ற வழியே நானும் செல்வேன் என்கின்றார்.

## EQUANIMITY, KEY TO DIVINITY

KNOWLEDGE cometh not but for balanced minds,
Balanced minds will never seek hell,
And, God - like too, will be balanced minds,
I too stick to the path of balanced minds.

— *Tirumoolar.*

### Note

Tirumoola was a renowned Yogi who carried out a thorough reform in the tenets of Hinduism. His way of approach was that of a Sidha. According to him retiring from the world, in meditation upon the Supreme Being alone cannot bring about any reform. Rather it is doing service to humanity befitting time and circumstance. That alone forms real service to God Siva. He did penance under the spreading pipil tree in Thiruvavaduthurai. He has sung three thousand hymns of which this forms one.

## வெல்லாவழக்கை விலைகொடுத்து வாங்குதல்

கல்வியுடையீர்! கருங்கா னகத்திடையே
நெல்லி யிலையுதிர்த்து நிற்பதேவன்? – வல்லாய்கேள்!
வெல்லா வழக்கை விலைவாங்கி வெல்விக்கும்
வல்லாளன் சுற்றம்போல் மாண்டு.

— ஔவையார்.

### குறிப்பு

இவர் திருவள்ளுவரின் தங்கையெனக் கூறப்படுகின்றார்; மக்களின் பலதரப்பட்ட தகுதிகளுக்கு ஏற்பப் பல நூல்கள் செய்தவர்; பெண்பாற்புலவர். இவர் செய்த நூல்கள் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம், நல்வழி, அசதிக்கோவை, நன்னூற்கோவை, அருந்தமிழ்மாலை, ஞானக்குறள், பந்தன் அந்தாதி முதலியன.

வெல்லா வழக்கை விலைக்கு வாங்கி வம்பளக்கும் வம்பன் சுற்றம்போல நெல்லிமரம் இலையுதிர்த்து வெறுமரமாக இருக்கிறது என்று வெல்லா வழக்கை விலைக்கு வாங்குபவன் குலம் அழிவதைக் கூறுகிறார்.

## QUARRELSOMENESS IS RUINOUS

O ! LEARNED, listen ! why stand the emblic,
Bereft of leaves in dense green forest,
O ! mighty, listen ! playing a losing game
Often leadeth to losing might and wealth.

— *Auvaiyar.*

### Note

Auvaiyar is said to be the sister of Tiruvalluvar. Her songs are simple in diction, lucid in expression and pregnant with moral truths and rules of conduct which could, with great profit, be followed by young and old. Some of her popular works are, Athichoodi, Konraivendan, Vakkundam, Nalvazhi, Asadikkovai, Nannorkovai, Arunthamizh Malai, Gnanakkural, Pandan Anthathi.

Like the emblic tree which sheds of its own accord, all its leaves in the midst of a thick, dense forest, a wealthy man, playing often a loosing game, stands alone devoid of all his wealth, might and relatives.

தமிழ் நாடுகளின் தனிச்சிறப்பு

வேழம் உடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து – பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து; தெண்ணீர் வயல்தொண்டை
நன்னாடு சான்றோர் உடைத்து.

— ஔவையார்.

குறிப்பு

பல நாடுகளின் பண்புகளையும் பெருமைகளையும் விளக்குவது.

## TAMIL KINGDOMS - THEIR GLORIES

TUSKERS abound in the mounts of Chera,
Famous Chola fields are rich in grains;
Pearls are in plenty in prosperous Pandia,
But Tondai watered fields abound in scholars.

— *Auvaiyar.*

### Note

This verse describes the famous cultural traits and characteristics of the different ancient countries of the South.

மாண்பமைந்த மனைவி

அடிசிற்(கு) இனியாளே! அன்புடை யாளே!
படிசொல் தவறாத பாவாய்! – அடிவருடிப்
பின்தூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ!
என்தூங்கும் என்கண் இரா.

— திருவள்ளுவர்.

குறிப்பு

திருவள்ளுவர் தன்னுடைய மனைவியார் வாசுகி இறந்த துன்பம் தாங்காது, மனைவியின் கடமையைத் தொகுத்துரைத்த செய்யுள் இது.

## THE IDEAL WIFE

THOU art a housewife, pleasing in manners,
Obedient always to your lord and endearing,
Sleeping after and awaking before your lord,
Alas, thou art gone; how shall I get sleep.

— *Tiruvalluvar.*

### Note

This verse depicts the misery of the poet when his wife Vasuki Ammaiyar breathed her last. The poet presents vividly the duties of a perfect housewife.

## உழவன் பெருமை

மேழி பிடிக்குங்கை; வேல்வேந்தர் நோக்குங்கை;
ஆழி தரித்தே அருளுங்கை; – சூழ்வினையை
நீக்குங்கை; என்றும் நிலைக்கும்கை; நீடுழி
காக்கும்கை காராளர் கை.

— கம்பர்.

### குறிப்பு

கவிச்சக்கரவர்த்தி கம்பர், தஞ்சை மாவட்டத்திலே, மாயூரம் வட்டத்திலே திரு அழுந்தூரில் உவச்சர் குடியில் பிறந்தவர். சடையப்ப வள்ளலால் பாதுகாக்கப் பெற்றவர். இராமாயணம், சடகோபர் அந்தாதி, சரசுவதி அந்தாதி, ஏரெழுபது, திருக்கைவழக்கம் முதலிய நூல்கள் இவரால் இயற்றப்பட்டவை. இராமாயணம் பாரகாவியமாகப் பாரதநாட்டின் பெருமையை விளக்குவது. காலம் கி. பி. 1120 ஆண்டுகளுக்குமுன். 'கல்வியிற் பெரியன் கம்பன்' 'விருத்தம் என்னும் ஒண்பாவில் உயர் கம்பன்' என்ற பாராட்டுக்களைப் பெற்றவர். இச்செய்யுள் வேளாளர்களின் வள்ளன்மை பொருந்திய கையின் சிறப்பைக் காட்டுவது.

## THE GLORY OF THE PLOUGH

HAND with the plough, looked up to by speared monarchs,
Benign as the Lord with chakra and everlasting,
Dispelling enveloped distress all around,
Ever extending protection to all is Farmer's.

— *Kambar.*

### Note

Kambar, the great poet, was born in Terazhandur, Thanjavur District. Hailing from a priest's family he was patronised by Sadayappa Vallalar. He has composed a number of works depicting the glorious aspects of cultural and social traits of our country. He has composed the great epic Ramayana, Sadagoparandhadhi, Saraswathi Anthadhi, Thirukhaivazhakkam etc. Ramayana, the immortal epic delineates the rich cultural heritage of our country. He lived during the twelfth Century A. D. He was accalaimed as "Kavichakravarthi Kambar" in view of his versatile and scholarly attainment as a great poet.

This poem shows the supreme reverence with which the Farmer's hand is cherished by all for its productivity and munificence.

## செவிடன் காதில் ஊதிய சங்கு

மூடர்முன்னே பாடல் மொழிந்தால் அறிவரோ
ஆடெடுத்த தென்புலியூர் அம்பலவா – ஆடகப்பொற்
செந்திருவைப் போலணங்கைச் சிங்காரித் தென்னபயன்
அந்தகனே நாயகனு னால்.

— இரட்டையர்.

### குறிப்பு

இச்செய்யுள் கவிச்சுவை அறியாத செல்வர்முன்னே கவியுரைத்து அலுத்துப்போய் அறிவித்தது. கணவன் குருடன்; அவன் மனைவியோ பேரழகி; மேலும் அவளை அணியாலும் ஆடையாலும் அழகு செய்கிருர்கள் பயன் என்ன? அதுபோலக் கவியை உணர இயலாத மூடர்கள்முன்னே அணி பல அமைந்த பாடல் மொழிந்தால் அதனை அவர்கள் அறிவார்களோ?

## CASTING SONGS BEFORE A DUNCE

SONG sung before the dunce is waste,
O! dancing Deity of Chidambaram, whither
Our efforts of adorning the damsel
Beautiful exceedingly, when her husband is blind?

—*Erattaiyar.*

### Note

This verse reveals the feelings of frustration of the poets in singing verses before the ignorant. This is described by a striking comparison. When the husband is blind, all our efforts in bedecking the wife with jewels and garmets will be of no avail. Likewise, dunces, devoid of poetic knowledge, will not appreciate fine poetry.

## கவிஞன் பசி

தேங்குபுகழ் நாங்கூர்ச் சிவனேயல் லாளியப்பா!
நாங்கள் பசித்திருக்கை ஞாயமோ – போங்காணும்
கூறுசங்கு தோல்முரசு கொட்டோசை யல்லாமல்
சோறுகண்ட மூளியார் சொல்.

— இரட்டையர்.

### குறிப்பு

இரட்டையர்கள் திருநாங்கூர் சென்றபோது நேரம் நண்பகல். இவர்களுக்குக் கடும்பசி. கோயிலில் மணி ஓசை கேட்டது. கோயிலுக்குப்போனால் உணவு கிடைக்கும் என்று எண்ணிச் சென்றனர். அங்கே அருச்சகன் கடவுளுக்குச் சோறுவையாமல், சுட்ட செங்கல்லைச் சோற்றுப் பட்டைபோல வைத்து ஈரத் துணியால் மூடி நிவேதித்து வந்தான். இவர்களுக்கு எப்படியோ தெரிந்துவிட்டது. தருமகர்த்தாவுக்கு இச்செய்தி தெரியட்டும் என்று எண்ணிப் பாடிய செய்யுள் இது.

## THE POETS' HUNGER

LORD Aliyappa, deity of Nangur,
Is it fair we go without food?
Say whither shall an impaired get his repast,
Without sounds of bell, conch and drum?

— *Erattaiyar.*

### Note

When Erattaiyar made their sojourn in Tirunangur it was already midday. They felt hungry. Hearing the sound of the temple bell, they went there to get some food. But, they were stuck with horror to see the priest offering baked bricks to God instead of rice. They wanted to report this matter to the Trustee of the temple.

கடவுள் நம்பிக்கை

அப்பிலே தோய்த்திட் டனுதினமும் நாமதனைத்
தப்பினல் நம்மையது தப்பாதோ — இப்புவியில்
இக்கலிங்கம் போனலென் ஏகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்கம் உண்டே துணை.

— இரட்டையர்.

## குறிப்பு

மதுரைக்குப் போயிருந்தபொழுது, பொற்றாமரையில் முடவர் இறங்கி ஆடை யலசினர். ஆடை குளத்தின் ஆழத்தில் போய்விட்டது; அப்போது முடவர், ஆடையை நாம் தினமும் தப்புகிறோம். இன்று அது நம்மைத் தப்பிவிட்டது என்றார். குருடர், நிலையை உணர்ந்து இவ்வாடை போனல் என்ன? மதுரைச் சொக்கலிங்கம் துணையிருக்கிறது என்றார். இதனைக் கேட்டுக்கொண்டிருந்த அவ்வூர் வள்ளல் ஒருவர் இவர்களுக்கு ஆடைகளை வழங்கினர்.

இரட்டையர்: இவர்கள் இளஞ்சூரியர், முதுசூரியர் என்று பெயர் பெற்றவர்கள். வக்கபாகை வரபதியாட்கொண்டானலும், கச்சிச் சம்புவராயனலும் போற்றப்பட்டவர்கள். இவர்களில் ஒருவர் முடவர், ஒருவர் குருடர். குருடர் முடவரைத் தோளில் தூக்கிச்செல்வார். முடவர் குருடர்க்கு வழிகாட்டுவார். இங்ஙனம் பல தலங்களுக்குச் சென்றுப் பல பாடல்கள் பாடியுள்ளனர். செய்யுளில் முற்பாதி முடவர் பாடுவர். பிற்பாதி குருடர் பாடுவார். காலம் வில்லிபுத்தூர் ஆழ்வார் வாழ்ந்த காலம். செய்த நூல்கள் ஆமாத்தூர்க்கலம்பகம், கச்சியுலா, தில்லைக்கலம்பகம் முதலியன. "பண்பாய கலம்பகத்திற்கு இரட்டையர்கள்" என்று பாராட்டப் பெற்றவர்கள்.

## IMPLICIT FAITH IN GOD

DAY after day in water we drench,
And thrash the apparel in cleansing,
Will it not elude us? no matter then,
When Madurai Chockalinga is there to shield.

—*Erattaiyar.*

### Note

Elanchuriar and Muduchuriar popularly known as Erattaiyar were patronised by vakkupagai Varapathiyatkonda and Kachi Kampulu Raya. One of them was lame, the other blind. The blind carried the lame on his shoulders. The lame would be the guide showing the way. They visited several shrines and sang the praise of the presiding deities on their way. The former half of each hymn was sung by the lame, while the latter by the blind. They were the contemporaries of Villiputhur Alwar. They composed several works, chief of them being Amathur Kalambagam, Tillaikkalambagam, Kacchiyula, etc., They became famous as writers of a superb kind of verse known as Kalambagam.

During their stay in Madurai, while cleansing his attire in the Potramarai Tank, the lame lost it in the water. At that time the lame sang the first half of this verse saying that they were beating the attire everyday and in turn it eluded their grasp that day. Learning the uneasy predicament of the lame, the blind said that they should not bother very much about it, as lord Chockalinga Himself was there to sheild them from any eventuality. Hearing this a philanthropist of the city offered them garments.

